ரூ. 3.50

# மக்கள் சிந்தனை

சமய சமுதாய இலக்கிய திங்களிதழ்

திருவள்ளுவராண்டு 2037
வைகாசி - மே 2006







திருக்கயிலாய பரம்பரைத் தருமை ஆதீனம்
26-ஆவது குருமகாசந்நிதானம்
திருப்பெருந்திரு சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்
81ம் நாண் மங்கல விழா

சிறப்பாசிரியர் : தவத்திரு குன்றக்குடி பொன்னம்பல அடிகளார்

# மக்கள் சிந்தனை

சமய சமுதாய இலக்கிய திங்களிதழ்

## விளம்பரக் கட்டணம்

| விவரம் | அளவு | 1 வெளியீடு | 12 வெளியீடு |
|---|---|---|---|
| பின் அட்டை | | | |
| வெளிப்புறம் | 1 பக்கம் | ரூ. 750 | ரூ. 7500 |
| அட்டை உட்புறம் | 1 பக்கம் | ரூ. 650 | ரூ. 6500 |
| இதழ் உட்புறம் | 1 பக்கம் | ரூ. 500 | ரூ. 5000 |
| இதழ் உட்புறம் | 1/2 பக்கம் | ரூ. 350 | ரூ. 3500 |

## சந்தா விவரம்

| | | |
|---|---|---|
| தனி இதழ் | ரூ. | 3-50 |
| ஆண்டுச் சந்தா | ரூ. | 40-00 |
| ஆயுட் சந்தா | ரூ. | 400-00 |
| புரவலர் கட்டணம் | ரூ. | 1000-00 |

சந்தா - விளம்பரம் அனுப்பவேண்டிய முகவரி :

*நிர்வாகி,*

**மக்கள் சிந்தனை**

குன்றக்குடி - 630 206

தொலைபேசி எண். 04577 - 264227

ஆசிரியர்

**மரு. பரமகுரு**

அச்சிட்டு வெளியிடுவோர் :
சண்முகநாதன் அச்சகம், குன்றக்குடி.

# மக்கள் சிந்தனை

நிறுவனர் : தவத்திரு குன்றக்குடி அடிகளார்

திருவள்ளுவராண்டு 2037 (விய) மாதம் : வைகாசி

மலர் : 20 இதழ் : 5




# நல்லாட்சி தொடரட்டும்

முத்தமிழறிஞர் டாக்டர் கலைஞர் அவர்கள் ஐந்தாவது முறையாகத் தமிழகத்தின் ஆட்சிபீடம் ஏறியுள்ளார்.

பதினைந்து வயதில் புதுச்சேரி வீதியில் உயிரைப் பணயம் வைத்துத் தொடங்கிய வாழ்க்கைப் பயணம் 83 வயதிலும் தியாகப் பயணமாய் தொடர்ந்து கொண்டிருக்கின்றது. உலகத்திற்கு ஞானம் வழங்கிய புத்தர் ஞான ஒளி பெற்ற நாளன்று கலைஞர் ஆட்சிபீடம் ஏறியுள்ளார். இது இயல்பாய் நிகழ்ந்தது மட்டுமல்ல! பொருத்தமாயும் நிகழ்ந்துள்ளது.

புடம் போட்ட பொன்னாய்ச் சுடர் வீசும் புத்தரின் துறவு மனப்பான்மையினை, நாம் பெற நம்மைப் பக்குவப்படுத்திக் கொள்வோம் என்று தம் சகாக்களுக்கு அறிவுரை - அறவுரை வழங்கி உள்ளார். கலைஞரின் கண்அசைவு எப்பொழுதும் கருணையின் அசைவுதான்! அவரின் விரலின் அசைவு எல்லாம், மாற்றமுடியாத தலைவிதி என்று நொந்த ஏழைகளின் விதியை மாற்றும் அசைவு! முத்தமிழறிஞர் கலைஞரின் நீண்டநெடிய பயணத்தினைப் பாருங்கள்! மாடாய் மனிதன் இழுத்த கைவண்டி ரிக்ஷா ஒழிந்தது! கைஏந்தி வாழ்ந்த பிச்சைக்காரர்கள் மறுவாழ்வு பெற்றனர். காரிருளில் தவித்தோர் எல்லாம் கண் ஒளித்திட்டத்தின் வழியே ஒளி பெற்றனர். உழவர் வாழ்க்கையை ஒடித்துப்போடும் தரகுச் சந்தையை ஒழித்திட்டு, உழவர் சந்தையை சமைத்திட்டு உழவர் வாழ்வில் ஒளி ஏற்றினார்! சாதி வெறி கோர தாண்டவம் ஆடும் நரகங்களை ஒழித்திடத்தான் சமத்துவபுரங்கள் எனும் சமாதான புரங்களை அமைத்திட்டார்!

யாமறிந்த மொழிகளிலே தமிழ்மொழி போல்
இனிதாவது எங்கும் காணோம்!

என்று பாரதி உரக்கக் கூவிய மண்ணில் தான் தமிழைச் செம்மொழி என அறிவிக்கச் செய்தார். தமிழரின் அதிசயமாகிய திருவள்ளுவப் பெருமானை உலகின் எட்டாவது அதிசயமாக்கிவிட்டார், கலைஞர் என்னும் அதிசயம். தமிழரின் நீண்டகாலக் கனவாய் இருந்த சேது சமுத்திரத் திட்டம் நனவாகியது! போராடிப் போராடித் தாம்பெற்ற வெற்றியை ஏழைகளின் வெற்றியாய் அர்ப்பணித்துள்ளார்! எப்படி? எப்படி? வாடும் ஏழையின் வயிற்று நெருப்பு அணைய முதல் கையெழுத்து இட்டு உள்ளார்! முடங்கிய விவசாயி கடன் சுமை தீர்க்க இரண்டாம் கையொப்பம் இட்டார்! ஆடிப்பாடும் அன்புத்தளிர்கள், அறிவுத்தளிர்களாய், ஆரோக்கிய மலர்களாய் மணம் வீச மூன்றாம் கையொப்பம் இட்டார்!

தமிழக சமய உலகத்தில் நீண்ட நெடுங்காலமாக இருந்த சமயப் போராட்டத்திற்கு நல்ல தீர்வு கிடைத்துள்ளது. ஒன்றே குலம் ஒருவனே தேவன் என்ற மகாமந்திரமாகிய திருமந்திரத்தினை ஓதுகின்ற நாம், சீலமும், பக்தியும், சான்றாண்மையும் உடைய நிலையில், இறைவன் திருமேனியைத் தீண்டி வழிபடுகின்ற உரிமை, பிறப்பின் பெயரால், சாதியின் பெயரால், தடுக்கப்பட்ட அவலம் நீக்கப்பட்டுள்ளது. தமிழகத்தின் புதிய முதல் அமைச்சரவைக் கூட்டம் 16.05.2006 அன்று நடந்தபொழுது சீலமும், பக்தியும் உடையவர்கள் அனைத்துச் சாதியிலும் இருந்து திருக்கோயில்களில் அர்ச்சகர் ஆக வழிவகுக்கும் அரசு ஆணையை, உச்சநீதிமன்ற தீர்ப்பின்வழி நிறைவேற்றிய முத்தமிழறிஞர் கலைஞர் தலைமையில் ஆன தமிழக அரசினை நன்றியுடன் பாராட்டுகின்றோம்.

எண்கள் இட்டு வரிசைப்படுத்துவது
பட்டியல் இட்டு மகிழ்வதற்கு அல்ல!
பட்டுப்போன வாழ்வு மலர்ந்து மணம் வீசுவதற்கு!
எண்ணிலடங்காத் துன்பங்கள் இல்லாது ஒழிவதற்கு!
அறியாமை இருள் அகல அறிவின் ஒளி புறப்பட
அன்பு அருளின் இசை பாட
மனிதநேயம் மலர்ந்து மணம்வீச
ஏழைஎளிய அடித்தளத்து மக்களின்
ஆட்சியாய்த் தொடங்கி உள்ளது

முத்தமிழறிஞர் கலைஞரின் ஆட்சி என்றும் நல்லாட்சியாய்த் தொடர வாழ்த்தி வரவேற்போம்!

ஐந்தாவது முறையாக தமிழக முதல்வராக
ஆட்சிக்கட்டிலில் அமர்ந்துள்ள முத்தமிழ் அறிஞர்
மாண்புமிகு **டாக்டர் கலைஞர்** அவர்களை

**மக்கள் சிந்தனை பாராட்டுகிறது**



# அகிலம் போற்றும் அருள்ஞான ஒளிஞாயிறு

அருள் ஞான ஆரா அமுதத்தை அள்ளி அள்ளி வழங்கும் திருஞான சம்பந்தர் எனும் அருள்ஞானப் பண்ணையில் விளைந்திட்ட நிறைதவஞான ஒளிவிளக்கு! அஞ்ஞான இருளை அகற்றும் மெஞ்ஞானச் சுடர் ஒளிவிளக்கு! அகிலம் எல்லாம் பக்தி ஞானநெறி பரவச் செய்திட்ட தவத்தின் சீலம்:

அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்
அன்பே சிவமாவது ஆரும் அறிகிலர்
அன்பே சிவமாவது ஆரும் அறிந்தபின்
அன்பே சிவமாய் அமர்ந்திருந் தாரே!

என்று இமைப்பொழுதும் நெஞ்சில் நீங்காது அன்பும் அருளும் கலந்த பூசையை - வழிபாட்டை நாளும் தவறாது நிகழ்த்திவரும் புண்ணியத்தின் புண்ணியம்!

குன்றின் மேலிட்ட தவஞான ஒளிவிளக்காய் அஞ்ஞான இருளை அகற்ற வாராது வந்த மாமணியாய், தருமைக் குருமணியாய் வந்துதித்த தவத்தின் சீலர், தருமை ஆதீன 26-வது குருமகாசன்னிதானம் சண்முக தேசிய பரமாசாரிய சுவாமிகள் எண்பதாண்டு நிறைவு காண்கின்றார்கள்.

தவமும், ஞானமும், துறவும் தொண்டும் வயது கடந்தவை! வாழ்வைக் கரைசேர்ப்பவை! எல்லைகாண இயலாதவை!

ஞானநெறி சூன்யத்தை ஞான்மாக்கும்!
அன்புநெறி நிர்மூலத்தை மூலமாக்கும்
தவநெறி இருளை ஒளியாக்கும்!
தொண்டுநெறி அன்பை அருளாக்கும்!

ஆதியும் அந்தமும் இல்லாத வாழ்முதல் பொருளை நோக்கி வழிநடத்தும் நிறைதவ ஞான வழியில் செம்மாந்து நடந்து அறியாமை இருளில் தவிக்கும் உயிர்களின் பாசப்பற்றை, நீக்கி அறிவின் ஒளியால் ஞானப்பயிர்களாக்கி அவன் அருளாலே அவன்தாள் வணங்கி அகிலம் போற்றும் தவஞான வேள்வி நிகழ்த்தும் அருள்ஞான ஒளிஞாயிறு தருமைக் குருமணிகள் 26ஆம் குருமகாசந்நிதானம் அவர்களைப் போற்றுவோம்! என்கடன் பணிசெய்து கிடப்பதே என்று தவத்தின் தவமாய், துறவின் துறவாய், உறவின் விரிவாய் விளங்கிய உலகிற்கோர் தவமணி, நம் குன்றக்குடிக் குருமணிகள் 45-வது குருமகாசந்நிதானம் குன்றக்குடி அடிகள் பெருமான் தோன்றாத் துணையாய் நின்று தம் துறவின் இணையரை, தவத்தின் இணையாரை, தொண்டின் இணையரைப் போற்றுவதை நினைந்து நினைந்து விழிநீரால் நனைவோம்!

தென்னாடுடைய சிவனே போற்றி!
எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி!

என்றும் வேண்டும் இன்ப அன்பு -

பொன்னம்பல அடிகள்

(சென்ற இதழ்த் தொடர்ச்சி)

# திருக்குறள் உரை

(தவத்திரு குன்றக்குடி அடிகளார்)

## 63. இடுக்கண் அழியாமை

அடிபடும் பொழுதெல்லாம் பந்து மேலெழும்; பாம்பு சீறும். நிலம் உழும்பொழுதெல்லாம் செழுமையுறும். அதுபோலத் துன்பம் வந்துற்ற பொழுதெல்லாம் அழுது அழிந்து போகாமல் மேலும் மேலும் முயற்சியில் ஈடுபடுதல் வாழ்வியல் சார்ந்த உண்மை.

போதிய அறிவின்மையாலும் பொருந்திய சூழலின்மையாலும் முன் பட்டறிவு இன்மையாலும் இடுக்கண் வருவது இயற்கை; தவிர்க்க இயலாதது. இடுக்கண்ணைக் (துன்பத்தை) கண்டு நடுங்கி, அவலத்தை வளர்த்து அழுது அழியாமல் தொடர்ந்து அறிவறிந்த ஆள்வினையில் ஈடுபட்டு வெற்றி காண்பதை வாழ்க்கையின் நோக்கமாகக் கொள்ளும்படி அறிவுறுத்துவது இந்த அதிகாரம்.

*இடுக்கண் வருங்கால் நகுக அதனை*
*அடுத்தூர்வது அஃதொப்பது இல்.* (621)

இடுக்கண் - துன்பம் வரும்பொழுது எள்ளி நகைத்திடுக. அந்த நகுதலைத் தொடர்ந்து வரும் சாதனை ஒப்பற்றதாக அமையும்.

நகுதல் - பரிகாசச் சிரிப்பு. அதாவது துன்பத்திற்குக் காரணமாய் அமைந்த தனது குற்றங்குறைகளையே நோக்கிப் பரிகாசமாகச் சிரித்தல். அங்ஙனம் சிரிக்கும்பொழுது தன்னைச் சார்ந்த குற்றங்குறை நீங்குவதால் சாதனைகள் பிறக்கும். வாழ்க்கையில் வெற்றிகளைவிடப் போராட்டங்களைக் கண்டு மகிழ்வதே சிறப்பு.

*வெள்ளத்து அனைய இடும்பை அறிவுடையான்*
*உள்ளத்தின் உள்ளக் கெடும்.* (622)

அறிவுடையவன் தன்னை நோக்கி வரும் வெள்ளம் போன்ற துன்பங்களை உள்ளத்தால் நினைத்தல்வழிக் கெட்டு விடும்.

ஊழினால் வரும் இடுக்கண் ஆள்வினையால் அழியும் நிலையை எடுத்துக் கூறியது.

நினைத்தலால் துன்பம் கெடும் என்றது, உயர்வுடைய நினைப்பு, ஆள்வினையாக உருப்பெறும் என்ற நம்பிக்கையில் கூறியது.

*இடும்பைக்கு இடும்பை படுப்பர் இடும்பைக்கு*
*இடும்பை படாஅ தவர்.* (623)

கடமைகளை இயற்றும் பொழுது வரும் துன்பத்திற்கு வருந்தாதவர்கள் துன்பத்திற்குத் துன்பம் கொடுப்பர்.

துன்பத்தைப் போக்கும் உழைப்பே இன்பத்திற்கு வழி. வேறு குறுக்கு வழிகள் இல்லை.

*மடுத்தவாய் எல்லாம் பகடுஅன்னான் உற்ற*
*இடுக்கண் இடர்ப்பாடு உடைத்து.* (624)

கடமை வாய்த்த வழியெல்லாம் பகடு போலக் கடமையைச் செய்பவனின் துன்பம், தாமே துன்பத்தைப் பெறும்.

தூக்குதற்கரிய பாரஞ்சுமந்து இழுக்கும் எருது, பக்கவாட்டில் சாய்ந்து நிலத்தை நோக்கி முகத்தைத் தாழ்த்தி முகர்ந்தும் முழங்காலினை மடித்தும் இழுக்கும் காட்சியைச் சற்றே காண்க. அதுபோலத் துன்பத்தைக் கண்டு துன்புறாமல் உழைப்பை மேற்கொள்ளுதல் வேண்டும்.

*அடுக்கி வரினும் அழிவிலான் உற்ற*
*இடுக்கண் இடுக்கட் படும்.* (625)

துன்பங்கள் ஒன்றன்பின் ஒன்றாக அடுக்கி வரினும், அத்துன்பங்களுக்கு அழியாது உள்ளக்கோட்பாட்டை விடாதானுக்கு வந்துற்ற துன்பங்கள் துன்பப்பட்டுப் போகும்.

"அடுக்கி வரினும்" துன்பங்களினுடைய மிகுதி பற்றிக் கூறியது.

*அற்றேம்என்று அல்லற் படுபவோ பெற்றேம்என்று*
*ஓம்புதல் தேற்றா தவர்.* (626)

பொருளைப் பெற்றபோது அதனைப் பாதுகாக்க மாட்டாதவர்கள் பொருள் அற்று வறுமை வந்தபொழுது நோவதென்.

*இலக்கம் உடம்புஇடும்பைக்கு என்று கலக்கத்தைக்*
*கையாறாக் கொள்ளாதாம் மேல்.* (627)

உடல் வாழ்க்கைக்குத் துன்பம் இயற்கையென்று நினைந்து துன்பத்தைத் துன்பமாக ஏற்றுக்கொள்ளாதவர்கள் மேலானவர்கள். அவர்களுக்குத் துன்பம் வாராது.

துன்புறாமல் துன்புறுவன எல்லாம் வளரும்; வாழும்.

*இன்பம் விழையான் இடும்பை இயல்புஎன்பான்*
*துன்பம் உறுதல் இலன்.* (628)

துன்பங்களை விரும்பாமல் துன்பங்களை இயல்பாக ஏற்றுக் கொள்பவன் துன்புறமாட்டான்.

இன்பம், துன்பம் அனுபவிப்பனுடைய அணுகுமுறையிலேயே இருக்கிறது.

*இன்பத்துள் இன்பம் விழையாதான் துன்பத்துள்*
*துன்பம் உறுதல் இலன்.* (629)

இன்பம் வந்துற்றபொழுது விரும்பி அனுபவிக்காதவன் துன்பம் வந்த பொழுது துன்புறுதல் இலன்.

இன்பத்தை விரும்பி அனுபவிப்பவர் துன்பம் வந்துற்ற பொழுது அல்லற்படுவர் என்றது.

*இன்னாமை இன்பம் எனக்கொளின் ஆகும்தன்*
*ஒன்னார் விழையும் சிறப்பு.* (630)

ஒருவன் கடமையைச் செய்யும்பொழுது வரும் துன்பங்களை இன்பம் எனக் கொண்டொழுகின் அவன் பகைவரும் அவனை மதித்துச் சிறப்புச் செய்வர்.

"இன்னாமை இன்பம் எனக்கொளின்" என்றதால் கொள்வோர் அருமை என்பது புலப்படுத்தியது.

(தொடரும்)

# செங்கமலத் திருவடிகள் தொழுதுய்வோமே!

(மரு. பரமகுரு)

சைவநெறிப் பயிர்வளர்க்கும் ஞானப் பண்ணை
தருமபுர ஆதீனத்(து) இருபத் தாறாம்
உய்வருளும் குருமூர்த்தி; ஞானச் செங்கோல்
ஓச்சுகின்ற சண்முகதே சிகனார் இந்த
வையமதில் அவதரித்த எண்பத் தோராம்
மங்கலநாள் கண்டார்காண்! வாழ்க மாதோ!
ஐயனவர் திருவடிகள் சென்னி வைத்தோம்!
அப்பெருமான் அருளாட்சி நீடு வாழ்க!

திருவாமூர்த் திருத்தலத்தில் அப்ப ருக்குத்
திருக்கோயில் கண்டவர்காண்; சென்னை யோங்கும்
தருமபுர ஆதீன நிலையம் தங்கித்
தக்கசம யப்பணிகளில் தலைநின் றார்காண்!
திருமுறைகள் உளமுருக ஓதி ஓதி
சிந்தையெலாம் சிவமயமாய்த் திகழ்கின் றார்காண்!
பெருமைமிகு தருமை ஆதீன ஞான
பீடம்எழுந் தருள்செயும்எம் பெம்மான் அம்மா!

இருபத்தேழ் திருக்கோயில் திருத்த மாக
எழிலாட்சி புரிபவர்காண்! கல்விக் கோயில்
உருவாக்கி விரிவாக்கி இளநெஞ் சங்கள்
ஒளிபெறச்செய் தறியாமை நீக்கி னார்காண்!
திருமுறைகள் உரையுடனே பதிப்பித் தார்காண்
திகழ்சைவ சித்தாந்த ஆய்வு மையம்
பரிவுடனே கண்டார்காண்! சுடரும் ஞானப்
பார்வையினால் மலவிருளைப் போக்கு வார்காண்.

தங்கம்போல் புடம்போட்ட தவத்தி னார்காண்;
தமதான்ம நாயகரைத் தலைசு மந்து
கங்கையணி செஞ்சடையன் கால காலன்
கடவூர்க்கு நடைபயணம் செய்த பாத
பங்கயர்காண்! மன்னுயிரின் வினைகள் தீர்க்கும்
பரமாசா ரியரிவர்காண்! பரசி வம்காண்!
செங்கதிர்போல் நிலவிநெடுங் காலம் வாழ்க!
செங்கமலத் திருவடிகள் தொழுதுய் வோமே!

---

முயற்சியின் விளைவாக, பயனாகத் துன்பங்களையும், துயர்களையும் ஏற்றுக்கொண்டு தொடர்ந்து உழைப்பவர்கள் மாமனிதர்களாகிறார்கள்; சாதனை செய்தவர்களாகிறார்கள். வரலாற்றில் இடம் பெறுகிறார்கள். முயற்சியில் ஈடுபடாதவர்கள் செத்துப் பிழைப்பதற்கே தொழிலாகிச் சாகின்றனர். வாழ்க்கை என்பது போராட்டம்! இந்தப் போராட்டத்தில் அக்கறையும் முயற்சியும் உடையவன் வீழ்ந்துவிட்டாலும் தரையில் மோதிய பந்துபோல் மீண்டும் எழுந்து விடுவான்.

**-குன்றக்குடி அடிகளார்**

---

## உலகம்பட்டி சி.லெ.நா. லெட்சுமணன் செட்டியார் எண்பதாம் ஆண்டு நிறைவு விழா

சிவகங்கை மாவட்டம் உலகம்பட்டி திருமிகு. **செ.லெ.நா. லெட்சுமணன் செட்டியார்** – திருமதி. **விசாலாட்சி ஆச்சி** ஆகியோரின் 80வது ஆண்டு நிறைவு சதாபிஷேக விழா 17.4.2006 திங்கட்கிழமை உலகம்பட்டி "லேனா பேரடைஸ்" இல்லத்தில் நடைபெற்றபோது குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீன குருமகாசந்நிதானம் அவர்கள் எழுந்தருளி சதாபிஷேக விழா தம்பதியருக்கு ஆசி வழங்கிச் சிறப்பித்தருளினார்கள்.

விழாவில் குன்றக்குடி ஆதீன திருப்பணிகளுக்காக ரூ. 25,000 நன்கொடையினை தம் குடும்பத்தின் சார்பாக திரு. லேனா காசிநாதன் குருமகாசந்நிதானம் அவர்களிடம் வழங்கினார்கள்.

**- கி. சிங்காரவடிவேல்**

# “அடிகள் முன்னர் யான் அடி வீழ்ந்தேன்” - 9

(மு. பழனிஇராகுலதாசன்)

இப்போது தேவகோட்டை ஸ்ரீசேவுகன் அண்ணாமலை கல்லூரித் தமிழ்த்துறையில் பணியாற்றும் திரு. கரு. முருகன் என் மாணவர்; மேற்படி கல்லூரியில் பி.ஏ. தமிழ் இலக்கியம் பயின்றவர். பாடத்திற்குரிய நூல்களோடு பிற இலக்கியங்களையும் தேடிப்படிக்கும் ஆர்வம் உடையவர். மாணவப் பருவத்தின்போது கல்லூரியில் “மனசு” என்ற இலக்கியக் கையெழுத்து ஏடு நடத்தியவர்; சிறுகதை படைப்பதில் ஆர்வம் மிக்கவர். குறிப்பாக ஆன்டன் செக்காவ் சிறுகதைகள் மீது மிகுந்த ஈடுபாடு கொண்டவர்; செக்காவ் எழுதிய உலகப் புகழ்பெற்ற “வான்கா” சிறுகதையை மறுபடியும் மறுபடியும் வாசித்து, அனுபவித்து எடுத்துச் சொல்பவர். ஆன்டன்செகாவ் சிறுகதைகள் நூல் ஒன்றைப் பல ஆண்டுகள் முன்பு என்னிடமிருந்து பெற்றுச்சென்று இன்றும் படித்துக் கொண்டே இருப்பவர். படைப்பு, படிப்பு, பொதுவேலைகள், கலை இலக்கியப் பெருமன்ற அலுவல்கள் எதுவானாலும் என் கருத்துக்கும் என் விருப்பத்துக்கும் இயைந்து செயலாற்றுபவர்.

ஒரு நாள்; கல்லூரியில் நான் ஏதோ ஒரு முக்கியமான அலுவலில் ஈடுபட்டிருந்தபோது, வேகமாக என்முன் வந்து நின்றார். “என்ன?” என்ற பாவனையில் நிமிர்ந்து பார்த்தேன்.

“நம்ம சாமியைப் பார்க்கவேண்டும்” என்றார். என்வேலையில் நான் ஈடுபட்டவாறே, “அதற்கென்ன, ஒருநாள் சென்று பார்ப்போம்; அல்லது நம் பாரதி விழாவுக்கு சாமிவரும்போது அறிமுகப்படுத்தி வைக்கிறேன்” என்றேன். என் பதிலைக் கேட்டபிறகு மாணவர் முருகன் அங்கிருந்து போய்விட்டிருப்பார் என்று நினைத்துக்கொண்டிருந்தேன்; போகவில்லை; நீண்டநேரம் நின்று கொண்டிருந்தார். நான் நிமிர்ந்து பார்த்ததும் அவர் சொன்னார் :

“இன்றைக்கே பார்க்கணும்; என்னை நாளைக்குள்ளாவது பார்க்கணும்; என்னை அழைத்துக்கொண்டு போகவேண்டும்”

இது மாதிரியான நல்லதும், முக்கியமானதுமான விஷயங்களில் முருகன் சிறிது அழுத்தமாகவும், பிடிவாதமாகவும் இருப்பார். நல்லது எது? முக்கியமானது எது? என்று தேர்ந்துபார்க்கும் முனைப்போ, ஆற்றலோ இல்லாத மாணவர் கூட்டத்தில் நல்லதை, முக்கியமானதைத் தேர்ந்து அதில் ஒரு மாணவர் அழுத்தமும் பிடிவாதமும் காட்டுவதில் தவறு ஏதுமில்லையே என்று உள்ளுக்குள் நினைத்துக்கொண்டேன்.

அவர் காட்டிய அழுத்தமும் பிடிவாதமும் மகிழ்ச்சியைத் தந்தது. "சரி, நாளைக்கு போகலாம்" என்றேன். மறுநாள் ஒரு வாய்ப்பான நாளாக அமைந்தது ஒரு சந்தர்ப்பம். மாவட்ட அளவிலான கலை இலக்கியப் பெருமன்ற வரலாற்றுக் குறிப்புக்கள் சேகரிக்க சிவகங்கை, மானாமதுரை, திருப்பத்தூர், காரைக்குடி ஆகிய இடங்களுக்குப் போவது என்று தீர்மானித்தோம். தேவகோட்டைக் கிளையின் செயலர் புலவர் ம.சவரிமுத்து (தேவகோட்டை தே.பிரித்தோ மேல்நிலைப்பள்ளியின் தமிழாசிரியர்) தலைமையில் திரு.என்.ஆர். ராமச்சந்திரன், தோழர் சி.முருகன், நான், மாணவர் கரு. முருகன் அனைவரும் புறப்பட்டோம். திட்டமிட்டபடி சிவகங்கை, மானாமதுரை, திருப்பத்தூர் ஆகிய இடங்களுக்குச் சென்றோம். திருப்பத்தூரில் பணியை முடித்துக்கொண்டு காரைக்குடிக்கு பேருந்துச் சீட்டு எடுக்கும் நேரம்.

மாணவர் முருகன் மறக்காமல் சொன்னார்: "எல்லாருக்கும் காரைக்குடிக்கு எடுத்துக்கொள்ளுங்கள்; நானும் அய்யாவும் குன்றக்குடிக்கு எடுத்து, அங்கே இறங்கிக் கொள்கிறோம்" அவர் திட்டமிட்டவாறே அவரும் நானும் குன்றக்குடியில் இறங்கினோம்; திருமடம் நோக்கி நடந்தோம்.

நல்ல வெயில் நேரம்; சூடு பரபரத்தது. மடத்துக்குள் நுழைந்ததும் "அண்ணன் பரமகுரு உள்ளே இருக்கிறார்களா?" என்று விசாரித்தேன்.

"மதியவேளை. வீட்டுக்குப் போயிருக்கிறார்கள்; பிற்பகல்தான் வருவார்கள்"

"சரி, சாமி இருக்கிறார்களா?"

திருமடத்துப் பணியாள் ஏதும் பேசாமல் எங்களை உற்றுப் பார்த்தார். அந்தப் பார்வையில் ஏதோ ஒரு செய்தி - அல்லது ஏதோ ஒரு சிக்கல் இருப்பதாக எனக்குப் புலப்பட்டது. என்னவாக இருக்கக் கூடும் என்று ஊகிக்க முடியவில்லை. எங்கள் விருப்பத்தைத் தெரிவித்தேன்.

"சாமிகளைப் பார்க்க வேண்டும்"

அதற்குள் இன்னொரு பணியாளர் வேகமாக எங்களிடம் வந்தார். நிலைமையைப் பின்வருமாறு தெரிவித்தார்.

"இன்றைக்கு காலையில் இருந்து மின்சாரம் இல்லை; ஏதோ ஒரு முக்கியமான 'ரெக்கார்டு' இருக்கும் இடம் தெரியலை; அது அவசரமா தேவைப்படுதுன்னு சாமி சொல்லிச்சு... சாமியே ஒரு லைட்டைக் கையில் வச்சுக்கிட்டு தேடிக்கிட்டு இருக்கு... நாங்க யாரும் மாடிப்பக்கம் போகலை"

"சாமி அவசர வேலையா இருக்கு; இருந்து பேச நேரமிருக்காது; கரண்ட்டும் இல்லை; முக்கியமான ரெக்கார்டு தேடியும் காணவில்லையே என்று சாமிக்குக் கோபம்... இந்த நேரத்துல சாமியை யாரும் பார்க்க வேண்டாம், பார்க்க முடியாது" என்று அந்தப் பணியாளர் சொல்லாமல் சொல்லிவிட்டுப் போய்விட்டார். நான் அருகில் நின்ற முருகனைப் பார்த்தேன்; அவர் இளம் கன்று; அவருக்குப் பயம் தெரியவில்லை; என் நிலை அப்படி இல்லை; எனக்குப் பயம் தெளியவில்லை. உடன் திரும்பிவிடுவோம்; இன்னொரு நாள் பார்த்துக்கொள்ளலாம் என்று நான் கருதினேன். அன்றைக்குத் தான் முதன் முதலில் திருமடத்துக்குள் வந்துள்ள இளைஞர் - மாணவர் முருகன் மடத்தின் அமைப்பையும், அறைகளையும், தூண்களையும் வியந்து வியந்து பார்த்துக்கொண்டே இருந்தார். இவ்வளவு எல்லைவரை வந்துவிட்டோம்; மூலவரைத் தரிசிக்காமல் போவதா? என்று அவர் எண்ணினார். "சாமியை எப்படியும் பார்த்துட்டுத்தான் போகணும்" என்றார்.

(தொடரும்)

## நீதிசார்ந்த ஆட்சிமுறையைக் காப்பாற்றுவோம்!

நமது நாடு அரசியலில், ஆட்சியில் வளர்ந்த நாடு. மனிதர்களுக்குள் உறவுகளை நிர்ணயம் செய்யும் நோக்கில் அரசியல் தோன்றியது; காலப்போக்கில் ஆட்சிமுறை வந்தது! நமது நாட்டை ஆண்ட அரசர்கள் மக்கள் நலம் நாடியவர்கள். அதனால்தான் பிரான்சு, சோவியத் போன்ற நாடுகளில் தோன்றிய புரட்சிகளைப் போல நமது நாட்டில் புரட்சி தோன்றவில்லை என்றும் நமது நாட்டின் ஆட்சி, நீதியைச் சார்ந்திருந்தது. அந்த நீதி சார்ந்த ஆட்சிமுறையை நாம் தொடர்ந்து காப்பாற்ற வேண்டும்.

-அருள்நெறித்தந்தை

எங்கே போகிறோம் நூலிலிருந்து

# சுந்தரர் வாழ்வியல் உணர்த்தும் தோழமை நெறி

(சொ. அருணன், புதுச்சேரி)

மானுட உறவுகளில் சிறப்பானது தோழமை உறவு. திருவள்ளுவர் நட்புக் குறித்த குறட்பாக்களில் தோழமையின் உயர்வைப் பேசுகிறார். கம்பன் குகனின் வாயிலாய்த் தோழமையைச் சிறப்பித்துப் பேசுகிறார். ஒத்த வயதுடையவர்களும், ஒத்த சிந்தனை உடையவர்களும் தோழமை கொள்ளலாம். ஆனால், மானுடப் பிறவியான ஒருவர், உலகெலாம் உணர்ந்தோதற்கரிய கடவுளிடம் தோழமை கொள்ள இயலும் என்பதற்கு எடுத்துக்காட்டாய் இலங்குவது வன்தொண்டர் என்றும், இறைத்தோழர் என்றும் சிறப்பிக்கப்பெறும் சுந்தரமூர்த்திநாயனாரின் செவ்விய வாழ்வியல் நெறியாகும். சமய குரவர் நால்வரில் அப்பர் அடிமை நெறியை விளக்கியவர். சம்பந்தர் மகன்மை நெறியை விளக்கியவர். மணிவாசகர் காதன்மை நெறியை விளக்கியவர். ஆனால் சுந்தரரோ இறைவன்பால் கொண்ட பேரன்பினால் இறைவனே இவர்க்குத் தோழனாயிருந்து தோழமை நெறியை விளங்கச் செய்தார். அவர்தம் வாழ்வியல் உணர்த்தும் தோழமை நெறியின் சிறப்புக்களை காண்பது நோக்கமாகக் கொண்டு இக்கட்டுரை அமைகிறது.

## தோழமையின் தோற்றம்

சிவனுறையும் கயிலையிலே பெருமானுக்குத் தொண்டு செய்தற்காய் உதித்தவர் ஆலால சுந்தரர். இறைவனுக்கு மனம் மகிழ மணமலர் மாலை கட்டும் நற்பணி அவருக்கு. கயிலை நந்தவனத்தில் ஒரு நாள் கமலினி, அனிந்திதை என்னும் இரு மகளிர் அவர்தம் சித்தம் கலைத்தனர். ஆதலால், ஆலால சுந்தரர் ஆரூர் சுந்தரராய் அவதரிக்க வேண்டியதாயிற்று. மண்ணுலகம் சென்று மாதரின்பம் துய்த்து மீள ஆணையிட்டார் சிவபெருமான்; ஆனபோதிலும் தன் அன்பு மிகுதியால் அவரைக் கொண்டு நட்பால் ஒரு நாடகத்துக்கு அடித்தளமிட்டார்.

## தடுத்தாட்கொண்ட தோழமை

மணக்கோலம் கொண்ட சுந்தரரைத் தடுத்தாட்கொள்ள வேண்டிச் சுந்தரரின் தோழர் முதியவர் கோலத்தில் வருகிறார்.

*"மொய்த்துவளர் பேரழகு மூத்தவடி வேயோ*
*அத்தகைய மூப்பெனு மதன்படிவ மேயோ*
*மெய்த்தநெறி வைதிகம் விளைந்தமுத வேயோ"*

என மயங்கும் திருக்கோலம். "அப்பா! சுந்தரா - அடிமை எனக்கு நீ! இப்போது நிறுத்துக மணம்! - என்றால் சுந்தரர்க்கு எப்படியிருக்கும்" வசைமொழிகள் முழுமையாக வசப்படவில்லை அவருக்கு. "பித்தனே, பேயனே" என்று திட்டித் தீர்த்துவிட்டார். மணம் தடைப்பட்டது. வழக்குக்கு அழைத்தார் ஈசன். "ஏதேனும் சான்றுண்டோ" எனச் சபையோர் வினவ, முன்பே சுந்தரர் கிழித்தெறிந்த ஓலைபோல் மற்றொன்றை இறைவன் காட்டியருளினார். அவ்வோலை,

*"அருமறை நாவல் ஆதிசைவன் ஆரூரன் செய்கை*
*பெருமுனி வெண்ணெய்நல்லூர்ப் பித்தனுக்கு யானும் என்பால்*
*வருமுறை மரபுளோரும் வழித்தொண்டுசெய்தற் கோலை*
*இருமையால் எழுதி நேர்ந்தேன் இதற்கிவை என்எ முத்து"*

எனச் சான்று காட்ட திருவெண்ணெய்நல்லூரில் தீர்ப்பாயிற்று. சுந்தரர், தோழருக்கு (இறைவனுக்கு) அடிமையானார்! ஆனால், உண்மையில் அடிமையானது தோழர்தான். எவ்வாறெனில் உளமுருக ஊன்நையக் கணப்பொழுதும் மறவாது துதிப்பார்க்கெல்லாம் கருணை காட்டாத இறைவன் தன்னைப் பித்தனே, பேயனே என்று இகழ்வானை நாடிச் சென்று அருளுதல் தோழமையின் மாண்பினை உணர்த்துவதற்காகத் தான் எனில் மிகையில்லை. இவ்வழியாக இறைவயப்பட்ட சுந்தரர் வசைமொழியையே வாழ்த்துமொழியாகக் கொண்டு தேவாரமிசைக்கின்றார்.

*"பித்தா! பிறைசூடி! பெருமானே அருளாளா!*
*எத்தால் மறவாதே நினைக்கின்றேன்! மனத்துன்னை*
*வைத்தாய்! பெண்ணைத் தென்பால் வெண்ணெய் நல்லூர்*
*அருட்டுறையுள்*
*அத்தா! உனக்காளாயினி அல்லேன் எனலாமே?"*

என்பதாக அமைகிறது, சுந்தரத் தமிழ். அதுமுதல் சுந்தரர், வன்தொண்டர் எனப் பெயர் பெற்றார். பதிகள்தோறும் சென்று இறைவனைப் பாடிப் பரவினார். ஆரூரில் அவருக்கு அருளாணை கிட்டிற்று. "நாம் உம்மை உனக்குத் தோழனாக்கிக் கொண்டோம்" என்பதே அது. எல்லா உயிர்கட்கும் ஆதியாய், சோதியாய், தாயாய், தந்தையாய் விளங்கும் பெருமான், சுந்தரர்க்குத் தன்னையே தோழனாக்கித் தந்து தோழமையைப் பெருமைப்படுத்தினார்!

*"என்னுடைய தோழனுமாய் யான் செய்யும்*
*துரிசுகளுக்கு உடனாகி"*
*தன்னைத் தோழமை யருளித் தொண்டனேன் செய்த*
*துரிசுகள் பொறுக்கும் நாதனை" என்றும்,*
*"எந்தை ஆள் தோழனை"*

என்றும் கேடில்லாதானைத் தோழனாய்ப் பெற்ற சுந்தரர் பாடிப்பரவுகின்றார். உள்ளத்தில் கள்ளமின்றி உவட்டாத அன்பு கொண்டு இறவாத இன்ப அன்பில் இரண்டறக் கலந்து நின்றால் இறைவனைத் தோழனாகக் கொள்ள முடியும் என்பதே சுந்தரர் வாழ்வியல் காட்டும் செந்நெறி.

தோள் கொடுத்த தோழன்

அன்று தடுத்த மணத்தை, இறைவன் தானே முன்நின்று நடத்திவைக்க முடிவு செய்தார். பரவையாரைக் கண்ட சுந்தரர் தம்மை மறந்ததையும் அறிந்தார். தம் கடப்பாடு கருதி,

*".... திருநாவ லர்கோன் மகிழத்*
*தாமக்குழலாள் பரவை வதுவை தகுநீர்*
*மையினால் நிகழச் செய்தார்"*

சிவபெருமான் தன்னை வணங்கும் அடியார்கட்கெல்லாம் அடியாராய் விளங்குபவர். சுந்தரர்க்கு தோழன்போல, அடியார்களுக்கெல்லாம் காவலனாயும், ஏவலனாயும் விளங்குபவர். ஆரூரில் ஒரு நாள் அடியார்சூழ நீண்ட தெருக்களைக் கடந்து திருக்கோயில் சென்றார் சுந்தரர். அவ்வாலயத்தே தேவாசிரிய மண்டபத்தில் அடியார் பலர் ஒன்றுகூடி அளவளாவியிருந்தனர். அவர்களைக் கண்ட சுந்தரரின் நெஞ்சம் கடல் கண்ட நதி போலும் அவர்களோடு கலந்துவிடக் கண்டது. ஆனால் அவருள்ளம் அவர்களுக்குத் தலைவனாக வேண்டுமென்றோ, தம்பெருமை காட்டவேண்டுமென்றோ எண்ணவில்லை. மாறாக, அவர்கட்கெல்லாம் அடியாராக - தொண்டராக நின்று பணி செய்யவே விழைந்தது. இவர்களை அடைந்து சிறப்படைக! என்றார் ஈசன். "நான் வாழ்ந்தேன்" என மகிழ்ந்தார் சுந்தரர். "அடியார் தம்மைப் பணிந்து பாமாலை சூட்டுக!" என்றார் மீண்டும். "பாடுதற்கும் அறிவேனோ?" என ஐயுற்ற சுந்தரர்க்கு தானே "தில்லைவாழ் அந்தணர்தம் அடியார்க்கும் அடியேன்" என அடியெடுத்துக் கொடுத்தார். ஆதலின் இவ்வடிகள் ஈசனடிகள் எனக் கொண்டு காணின், ஈசனே அடியார்க்கு அடியார் என்பதனை மொழிந்தவர் என்பதை உய்த்துணரலாம்.

(தொடரும்)

# தவத்திரு குன்றக்குடி அடிகளார்

(சந்தக்கவிஞர்.சக்கந்தி. **நா. வேலுச்சாமிதுரை**)

குன்றக்குடி மாமுனிவர்
குறைகளில்லா மாமனிதர்
கண்ணெதிரில் கண்ட
அப்பரல்லவா! - அந்த
கன்னித்தமிழடிகள் புகழ்
சொல்லவா! ...

சீர்திருத்தச் செம்மலவர்
சேவைக்குண வள்ளலவர்
பார்போற்ற வாழ்ந்தமகான்
பைந்தமிழில் வல்லவராம்
சாதிமதங் கடந்தமேதை
யல்லவா! - அந்த
சமதர்மத் துறவிபுகழ்
சொல்லவா! ...

இறைவனில்லை என்போரும்
ஏற்றிடுவர் அவர்கருத்தை
இதயமில்லாக் கொடியரையும்
இணங்கவைக்கும் அடிகள்வார்த்தை
காவியுடை தரித்தகாரல்
மார்க்ஸவர்! என்றும்
காலங்களை வெல்லும் தமிழின்
மூச்சவர்! ...

இலக்கிய ஆற்றல்மிகு
ஈடற்ற தவஞானி
ஏழையரின் வாழ்வில்நலம்
ஏற்றிவைத்த அருளேணி!
மடமைகள் தனைஎதிர்த்த
மடாதிபதி - தேச
மக்களென்றும் போற்றுகிற
மகுடாதிபதி! ...

மக்களுக்குத் துயரமென்றால்
மாற்றுதற்கு அடிகள் செல்வார்
பக்தியிலே போலியில்லா
பாசஇறை நேசச்செல்வர்
அறிவியல் கலைவளர்த்த
அன்னையவர்! - நம்மை
அழவிட்டு அடைந்துவிட்டார்
விண்ணையவர்! ...

(இந்தப் பாடல் 15.4.2006 அன்று இராமநாதபுரத்தில் நடைபெற்ற தமிழ்ச்சங்க விழாவில் தவத்திரு குன்றக்குடி பொன்னம்பல அடிகளாரின் முன்னிலையில் முதன் முறையாகவும் 16.4.2006 அன்று சிவகங்கை பிரம்மஞான சபையில் நடைபெற்ற சிறப்புச் சொற்பொழிவின்போது இரண்டாவது முறையாகவும் பாடப்பட்டது)

## ஒருங்கிணைந்த வளர்ச்சி வேண்டும்!

அறிவு வளரும்போதே, ஆன்மாவும் ஒருங்கிணைந்து வளரவேண்டும். ஆன்மாவை வளர்த்துப் பேணிக்காக்கும் அறிவே, அறிவு. ஆன்மாவுக்குத் தொடர்பில்லாத அறிவு, வளர்ச்சிக்குத் துணை செய்யாது; மாற்றங்களுக்கும் காரணமாக அமையாது.

சிந்தனையில் வளர்ச்சி, அறிவில் வளர்ச்சி, அறிவியலில் வளர்ச்சி, வாழ் நிலையில் வளர்ச்சி, சமூகத்தில் வளர்ச்சி இவையெல்லாம் ஒருங்கிணைந்த நிலையில் நிகழுமாயின் மாற்றங்கள் ஏற்படும்.

-அருள்நெறித்தந்தை
எங்கே போகிறோம் நூலிலிருந்து

(சென்ற இதழ்த் தொடர்ச்சி)

# அறிவியல் உறவும் ஆன்மீக உறவும்

(டாக்டர். கே. பாலகிருஷ்ணன்)

பாகம் - 2

1978 - ஆம் ஆண்டு விஞ்ஞானி திரு. பி.ஏ. ஷெனாய் அவர்கள் திட்டக்குழுத் தலைவராகச் செயல்பட்டார். திட்டக்குழு தொழில் கருத்தரங்கிற்கு உயர்நிலைப்பள்ளியில் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. இராமநாதபுர மாவட்ட (பிரிக்கப்படாத) தொழில் வளர்ச்சிக் கழகத்தில் நான் செயலராக இருந்த காலத்தில், தொழில் வளர்ச்சிக் குழு, அந்த மாவட்டத்திற்கேற்ற தொழில்களை பட்டியல் இட்டுத் தந்திருக்கிறது.

அதன் அடிப்படையில் குன்றக்குடிக்கான தொழில்களை தேர்ந்தெடுத்த தொழில்களை முன்வைக்கும் வாய்ப்பு எனக்குக் கிட்டியது. அடிகளார் அவர்கள் எல்லாவற்றையும் உன்னிப்பாகக் கவனித்து, முந்திரி தொழிற்சாலை அமைப்பதற்கு முன்னுரிமை கொடுத்தார். அவர் அளித்த விளக்கம் : நம் பகுதியில் முந்திரி சாகுபடி அதிகமாக இருக்கிறது. தற்பொழுது கேரள மாநிலத்திலிருந்து முந்திரிக் கொட்டையை வாங்கிச் செல்கிறார்கள். நம் விவசாயிகள் பயனடைய, உற்பத்தியாளர் கூட்டுறவுத் தொழில் சங்கம் அமைக்கலாம் என்றார்.

திரு. ஷெனாய் அவர்கள் கூறுகையில் முந்திரித் தொழிற்சாலை கர்நாடக மாநிலத்தில் நலிந்துபோய்விட்டது. இது வெற்றிகரமாக நடக்க வாய்ப்பில்லை என்று கூறினார்கள். ஆனால் அடிகளார் அவர்கள் அதற்கான காரணம் தெரியாமல் நாம் எந்த முடிவும் எடுக்கக்கூடாது. நாம் பண்ருட்டி சென்று அங்குள்ள முந்திரித் தொழிற்சாலையைப் பார்த்துவிட்டு பிறகு முடிவெடுப்போம் என்று கூறி உடனேயே விஞ்ஞானிகள் மற்றும் மாவட்ட மைய தொழில் அலுவலர்கள் அடங்கிய ஒரு குழுவை இரண்டு கார்களில் பண்ருட்டிக்கு அனுப்பி வைத்தார்கள். அங்கு நடத்திய ஆய்வுக்குப் பிறகு, 27.08.1978-ல் தொழில் துவங்க தீர்மானிக்கப்பட்டு, கூட்டுறவு சங்கம் பிறந்தது. பண்ருட்டியிலிருந்து முந்திரிக் கொட்டை உடைப்பதற்கும், தோலிலிருந்து எண்ணெய் எடுப்பதற்கும் பயிற்றுநர்கள் கொண்டு வரப்பட்டு குன்றக்குடி மற்றும் அருகாமையிலுள்ள கிராம மக்களுக்கு பயிற்சி கொடுக்கப்பட்டது.

ஆண்டு ஒன்றுக்கு 100 டன் முந்திரிக்கொட்டை உடைத்து, தரம் பிரித்து தகரங்களில் அடைத்து கரியமில வாயு அடைக்கப்பட்டு வியாபாரம் தொடங்கியது.

முந்திரி தோலிலிருந்து எடுக்கும் தொழில் நுட்பத்தை பண்ருட்டியில் வந்த வேதியியலார் சில நாட்கள் தங்கி அத்தொழிலையும் சீரமைத்துக் கொடுத்தார். சூளை அமைத்து எண்ணெய் எடுத்தும் செய்முறையில் விளக்கினார். முந்திரித் தோலை உலையில் போட்டு சூடுபடுத்தினால், முந்திரி எண்ணெய் கசிந்து வெளிவரும். இந்த எண்ணெய் விற்கப்பட்டது. எண்ணெய் எடுத்த பிறகு கருமையான முந்திரித் தோல்கள், சுண்ணாம்புக் காளவாய்களுக்கு எரிபொருளாக விற்கப்பட்டது.

அடிகளார் அவர்கள் முந்திரி எண்ணெயை எதற்கு பயன்படுத்துகிறார்கள் என்று வினவினார்கள். "பிரைமர் பெயிண்ட்" தயாரிப்பதற்கான வார்னிஷ் செய்யப்படுகிறது. இதை அடிப்படையாகக் கொண்ட வார்னிஷ் மற்றும் வண்ணங்களுக்கு அரிமான எதிர்ப்புத் திறன் (Anti-Corrosive Property) அதிகமாக இருக்கிறது என்ற விவரங்கள் கூறப்பட்டன. இவற்றைக் கேட்ட அடிகளார் அவர்கள் எண்ணெயாக விற்காமல் நாம் ஏன் அந்த பெயிண்டை தயார் செய்து விற்கக் கூடாது என்று கேட்டார்கள். பெயிண்ட் தயாரிக்கக்கூடிய தொழிலை ஆரம்பிப்பது என்று 28.08.1981 அன்று நடந்த கூட்டத்தில் முடிவு எடுக்கப்பட்டது.

முந்திரி எண்ணெயிலிருந்து அரிமானத்தை எதிர்க்கக்கூடிய (Anti Corrosive Paint) வண்ணம் தயாரிக்கும் தொழில்நுட்பம் அப்பொழுது பிராந்திய ஆராய்ச்சிக் கழகம் (Regional Research Ltd.) ஹைதராபாத்தில் இருந்தது.

அடிகளார் அவர்களும், நானும் சென்று தொழில் நுட்ப விவரங்களை சேகரிக்க தீர்மானிக்கப்பட்டது. அதிர்ஷ்டவசமாக என்னுடைய நண்பர் முனைவர் திரு. G. தியாகராசன் அவர்கள் அப்பொழுது அந்த ஆய்வகத்தின் இயக்குநராக இருந்தார்கள். (எண்ணெய் உற்பத்தி சார்ந்த தொழில் நுட்பத் துறையில் வல்லுநராகவும் சிறந்த விஞ்ஞானியாகவும் விளங்கினார். இளம் வயதிலேயே இயக்குநராக பணியாற்றும் வாய்ப்புக் கிட்டியது. தஞ்சாவூர் மாவட்டத்தைச் சேர்ந்தவர்).

தவத்திரு அடிகளாரும் நானும் விமானம் மூலம் ஹைதராபாத் சென்று அடைந்தோம். முனைவர் தியாகராசன் விமான நிலையத்தில் வரவேற்று தங்குவதற்கும் ஏற்பாடுகளைச் செய்திருந்தார்.

ஆய்வகத்தின் இயக்குநர் அலுவலகத்தில் முனைவர் தியாகராசனோடு முதல் சந்திப்பு ஏற்பட்டது. அறிமுகத்திற்குப் பிறகு ஆய்வகத்தின் எல்லா துறைகளுக்கும் சென்று பார்த்தோம். அடிகளார் அவர்கள் தன்னுடைய நோட்டுப் புத்தகத்தில் குறிப்பெடுத்துக் கொண்டார்கள். பல தொழில் நுட்பங்களில் ஆர்வம் காட்டினார்கள். தண்ணீரில் மிதக்கக் கூடிய "Water Hyacinth" என்னும் தாவரத்திலிருந்து பேப்பர் தயாரிக்கும் தொழில் நுட்பம் மற்றும் தாவர வித்துக்களிலிருந்து எண்ணெய் உற்பத்தி செய்யும் தொழில்நுட்பம் போன்றவைகளில் செய்திகள் சேகரித்தார்கள். இதற்கான Pilot Plant என்று சொல்லக்கூடிய சிறிய "முன்னோடி தொழிற்கூடத்தை" பார்வையிட்டார்கள்.

கடைசியாக முந்திரி எண்ணெயிலிருந்து வண்ணம் தயாரிக்கும் ஆய்வுக்கூடத்தில் அந்த விஞ்ஞானிகளுடன் கலந்து பேசினார்கள். Primer என்பது உலோகத்தையோ, மரத்தையோ அதன் அடிப்பாகத்தை சுத்தம் செய்தவுடன் அவற்றின் மேல் அடிக்கக்கூடிய முதலாவது வண்ணம். முந்திரி எண்ணெய் பயன்படுத்தி தயாரிக்கப்படும் பிரைமர் அதிக அரிமான எதிர்ப்புத் திறன் கொண்டவை. Zinc Chomate Primer (மஞ்சள்), Red-Oxide Primer (சிவப்பு) என்ற இரண்டு விதமான ப்ரைமர் வண்ணங்கள் தேர்ந்தெடுக்கப்பட்டன. அக்காலத்தில் போக்குவரத்துக் கழகம், ரயில் துறை மற்றும் தொழிலகங்களில் அதிகமாகப் பயன்படுத்தப்பட்டன. மஞ்சள் நிற "சிங்க் க்ரோமேட்" இப்பொழுது சூழ்நிலை மாசுபாட்டுக் காரணமாக தடை செய்யப்பட்டுள்ளது.

மர உறுப்புகள் மேல் அடிக்கும்போது, மரத்தை கரையான் தாக்காமல் பாதுகாக்கும் தன்மை வாய்ந்தவை. தொழிலகங்கள், கப்பல்துறை, போக்குவரத்து வாகனங்கள் ஆகியவைளில் இதற்கு அதிகமான தேவையுள்ளது என்று விளக்கினார்கள். இந்தத் தொழில் நுட்ப உரிமம் பெற ரூபாய் பத்தாயிரம் கட்டவேண்டும் என்றும் நாங்கள் நேரில் வந்து உற்பத்தி செய்து காட்ட வேண்டுமனால் அதற்குத் தனிக் கட்டணம் உண்டு என்றும் கூறினார்கள்.

மாலையில் இயக்குநர் தியாகராசன் முன்னிலையில் மீண்டும் கலந்துரையாடல் தொடங்கியது. அப்பொழுது அடிகளார் அவர்கள் கூறினார்கள். நாங்கள் சிறிய கிராமத்தில் முந்திரி உற்பத்தி செய்யும் விவசாயிகளுக்கு நல்ல வருமானத்தைக் கொடுக்கும் வகையில் கூட்டுறவுத் துறையில் முந்திரித் தொழிற்சாலை அமைத்துள்ளோம். முந்திரி தோலிலிருந்து சூளை முறை மூலம் எண்ணெயும் எடுத்து வருகிறார்கள். வண்ணம் தயாரிக்கும் தொழில் நுட்பம் கிடைத்தால், உற்பத்தி செய்யக்கூடிய எண்ணெயை அவர்கள் பயன்படுத்தி வண்ணமும் தயாரிக்க வாய்ப்பு இருக்கிறது. இதன் மூலம் தொழில் கூட்டுறவுச் சங்கமும் வலிவு பெறும். ஆனால் அதை ஏழை விவசாயி அங்கத்தினர்களால் ரூ. 10,000/- கொடுப்பது சிரமம். கூட்டுறவுத் துறை என்ற காரணத்தால் உரிமத் தொகையை தள்ளுபடி செய்தால் எங்கள் கிராம முன்னேற்றத்திற்கு உங்களுடைய உதவியாக இருக்கும் என்றும் மிகவும் நயம்படக் கூறினார். கிராமத்திற்கு நவீன தொழில்நுட்பத்தை எடுத்துச் செல்வது இதுதான் முதன்முறை. அதற்கு இயக்குநர் அவர்கள் துணையாக இருக்க வேண்டும் என்றும் கேட்டுக் கொண்டார்கள்.

இயக்குநர் G. திராயகராசன் தனது விஞ்ஞானிகளுடனும், தொழில்நுட்பத்தை விற்கும் பிரிவுடனும் கலந்து பேசி ஒரு முடிவுக்கு வந்தார்கள். அவர்கள் கூறியதாவது : அடிகளார் அவர்கள் தொழில் நுட்பத்தைத் தங்களுக்குக் கேட்கவில்லை. தொழில் கூட்டுறவுச் சங்கத்திற்கு அதுவும் விவசாயிகளை அங்கத்தினர்களாக கொண்ட சங்கத்திற்கு, ஒருங்கிணைந்த கிராம முன்னேற்ற திட்டத்தின்கீழ் செயல்படுத்த விரும்புகிறார்கள். ஆகையால் இந்தத் தொழில் நுட்பத்தை கூட்டுறவுச் சங்கத்திற்கு கட்டணமின்றி கொடுக்கிறோம். மேலும் இத்தொழில்நுட்பம் தொடர்ந்து நல்ல முறையில் செயல்பட எங்கள் விஞ்ஞானிகளை குன்றக்குடிக்கு எங்கள் செலவில் அனுப்பி உங்களுக்கு உதவி செய்கிறோம். இதன்மூலம் கிராமங்களில் நவீன தொழில்நுட்பங்களின் செயல்பாட்டுக்கு உதவி செய்ய எங்களுக்கு வாய்ப்பு கிடைத்ததில் மிக்க மகிழச்சி அடைகிறோம் என்று கூறினார்கள்.

ஒப்பந்தத்தில் இருவரும் கையொப்பம் இட்டார்கள். அன்று முனைவர் தியாகராசன் அடிகளார் அவர்களை தங்கள் இல்லத்திற்கு உரிய மரியாதைகளுடன் அழைத்து அவரும் அவரது துணைவியாரும் எங்களுக்கு நல்ல விருந்தைக் கொடுத்தார்கள். மறுநாள் காலை

விடைபெற்று நிறைந்த மனதுடன் விமானம் மூலம் சென்னை வந்தடைந்தோம்.

ஒரே வாரத்தில் கட்டடங்கள் கட்டப்பட்டன. "பால்மில்" என்ற இயந்திரம் விரைவாக வாங்கப்பட்டது. மூலப்பொருட்கள் பறந்து வந்தன. ஹைதராபாத்திலிருந்து விஞ்ஞானிகள் வந்திருந்து வண்ண உற்பத்தியை இரண்டு, மூன்று தடவைகள் செய்து காட்டினார்கள். 1983 அக்டோபர் மாதம் வண்ண உற்பத்தி தொடங்கியது. இன்றும் இந்த வண்ண உற்பத்தி குன்றக்குடியில் சிறப்பாக நடைபெற்று, தரத்திற்கும் தகுந்த விலைக்கும் பெயர்போனதாக விளங்குவது நாம் அறிவோம்.

அடுத்து வருவது அடிகளார் அவர்களின் மைசூரில் உள்ள மைய உணவு தொழில்நுட்ப ஆய்வகம்.

(தொடரும்)

## தமிழக அரசுக்கு நன்றி!

தமிழக சமய உலகத்தில் நீண்ட நெடுங்காலமாக இருந்த சமயப் போராட்டத்திற்கு நல்ல தீர்வு கிடைத்துள்ளது. ஒன்றே குலம் ஒருவனே தேவன் என்ற மகாமந்திரமாகிய திருமந்திரத்தினை ஓதுகின்ற நாம், சீலமும், பக்தியும், சான்றான்மையும் உடைய நிலையில், இறைவன் திருமேனியைத் தீண்டி வழிபடுகின்ற உரிமை, பிறப்பின் பெயரால், சாதியின் பெயரால், தடுக்கப்பட்ட அவலம் நீக்கப்பட்டுள்ளது. தமிழகத்தின் புதிய முதல் அமைச்சரவைக் கூட்டம் 16.05.2006 அன்று நடந்தபொழுது சீலமும், பக்தியும் உடையவர்கள் அனைத்துச் சாதியிலும் இருந்து திருக்கோயில்களில் அர்ச்சகர் ஆக வழிவகுக்கும் அரசு ஆணையை, உச்சநீதிமன்ற தீர்ப்பின்வழி நிறைவேற்றிய முத்தமிழறிஞர் கலைஞர் தலைமையில் ஆன தமிழக அரசினை நன்றியுடன் பாராட்டுகின்றோம்.

# எத்தனை ஆசிரியர்!

(கவிவேந்தர். கா. வேழவேந்தன்)

பள்ளியில்தான் ஆசிரியர் உள்ளார் என்றே
பார்க்காதே, என்தோழா! அதோபார்; ஆழி
துள்ளிவரும் 'வெள்ளலை' ஓர் ஆசான்; தோயாச்
சுறுசுறுப்பை அதைப்போலே புகட்டு வோர்யார்?
வெள்ளியுடன் விழித்தெழுந்தே விடியல் தன்னை
விளம்புகின்ற 'காகம்' ஓர் ஆசான்! நெஞ்சை
அள்ளுகின்ற புன்சிரிப்பின் மாண்பைக் கூறும்
'அழகுமலர்' ஒவ்வொன்றும் ஆசான் என்பேன்!

தன்கடமை தவறாமல் நடக்கும் 'ஆ' றோ
தடம்உணர்த்தும் பேராசான் என்பேன்! வீசும்
மென் 'தென்றல்' ஓர்ஆசான்; தேடி வந்து
மேனிக்கே மகிழ்வூட்டும் தொண்டைக் கூறும்!
வன்னெஞ்சர் வாளாலே வெட்டி னாலும்
மாளும்வரை நிழல்தந்தே குளிர்ச்சி நல்கும்
நன் 'மரம்' ஓர் நல்லாசான்! கூட்டுத் 'தேனீ'
நமக்கெல்லாம் 'சேமிப்' பை உணர்த்தும் ஆசான்!

சீர்வரிசை ஒழுங்குமுறை செப்பும் ஆசான்
'சிற்றெறும்' பைப் போலுண்டா? கழிவு நீரை
வேருக்கே அளித்தாலும் 'தென்னை' தானே
விருப்பமுடன் 'இனிப்பிளநீர்' கொடுக்கும் ஆசான்!
ஏர்முனையால் சீர்உழவர் வதைத்த போதும்
இதமுடனே உதவும் 'மண் புழு' வோர் ஆசான்!
பார் நண்பா! உற்றுப்பார்! உலக மெங்கும்
பல்வேறு ஆசிரியர் உள்ளார்! தேடு!

ഗഗഗഗഗ

(சென்ற இதழ்த் தொடர்ச்சி)

# "கம்பன் என்றொரு மானிடன்"

(தமிழாகரர்.பேராசிரியர்.**சாமி. தியாகராசன்**)

கைகேயின் மகன் பரதன். கேகயனுக்குத் தசரதன் தந்த வாக்குப்படிப் பரதன்தான் அரசு கட்டிலில் அமரவேண்டும். அவனை அரசனாக்காமல் மாறாக இராமனை அரசனாக்க முடிவு செய்து அதற்கான ஆயத்தங்களில் ஈடுபடுகின்றான் தசரதன்.

இதனால் கோபம் கொண்ட கைகேயி தசரதன் தந்த சத்தியத்தை நினைவுபடுத்தி அவன் தந்திருந்த இரண்டு வரங்களைப் பயன்படுத்தி ஒரு வரத்தின் மூலம் தன் மகனுக்குரிய ஆட்சியைப் பெற்றும் இன்னொரு வரம் மூலம் இராமனைக் காட்டிற்கு அனுப்பியும் வைக்கின்றாள் என்று வான்மீகி சொல்கின்றார். வான்மீகிக் கதையில் கைகேயியின் பக்கம் முழுமையான நியாயம் இருக்கிறது என்பதை உணர்ந்து கம்பன் அந்தக் கதையை மேற்கொள்ளவில்லை என்பர் சிலர்.

கைகேயியின் பக்கம் நியாயம் இருக்கிறது என்பது முற்றிலும் சரியன்று. முதல் வரத்திற்குத்தான் அந்த நியாயம் பொருந்தும். இரண்டாம் வரத்திற்குப் பொருந்தாது. ஏனெனில் இராமன் காட்டிற்குச் செல்லவேண்டும் என்னும் கைகேயியின் கட்டளைக்கான காரணத்தை நியாயத்தை வான்மீகி சொல்லவில்லை. ஆதலால் பொருந்தாது.

தந்தை தசரதன் செய்த தவற்றிற்காகத் தனயன் காடாள வேண்டும் எனக் கட்டளையிட்டாள் என்றால் அது கைகேயி என்னும் பாத்திரத்தின் புனிதத் தன்மையைப் பாதிக்கும்.

தசரதன் கேள்வியை மீண்டும் நினைவுக்குக் கொள்வோம். ஒரு வரத்தினால் தன் மகன் பரதன் நாடாள வேண்டும் என்றாள். சரி, நியாயம் உள்ளது. அடுத்த வரத்தை ஏன் பயன்படுத்தினாள்? அந்த வரத்தால்

இராமன் காடாள வேண்டும் என்றாளே ஏன்? இராமன் நாட்டிலே இருந்தால் இவளுக்கு என்ன பாதிப்பு? இதுதான் தசரதன் நெஞ்சில் நிற்கும் கேள்வி. இந்தக் கேள்விக்கு வான்மீகத்தில் விடை உண்டா? இல்லையே.

இந்த இடர்ப்பாட்டை உணர்ந்தே வான்மீகியின் கதையைக் கம்பன் கைவிட்டான் என எண்ணவேண்டியுள்ளது. வான்மீகிக் கதையைக் கைவிட்ட கம்பன், இரண்டு வரங்கள் என்ற அடிப்படையை விட்டு விடவில்லை என்பதைக் கவனத்தில் கொள்ள வேண்டும். இவ்விரண்டு வரங்களுக்கான காரணத்தைக் கம்பன் காட்டியுள்ளானா என்றால் காட்டியுள்ளான் என்றே கருதத் தோன்றுகின்றது. அதனைப் பார்ப்போம்.

கூனி, கைகேயியின் உற்ற தோழி மற்றும் தாதி. கைகேயியின் இன்ப துன்பங்களில் பங்கேற்பவள். இராமன் முடி ஏற்கக்கூடாது பரதன்தான் பட்டம் ஏற்க வேண்டும் எனப் பலவாறு அவள் கைகேயியிடம் காரணங்களை அடுக்கிக் கூறுகிறாள். அவள் எடுத்து வைக்கும் காரணங்களில் மூன்று முக்கியமானவையாகும். ஒன்று கைகேயி பட்டத்தரசி எனக்கூறுவது. மற்றொன்று மூத்தவற்குத்தான் அரசு உரியது என்றால் தசரதன் உயிரோடு இருக்கும்போது இராமனுக்கு ஏன் முடிசூட்ட வேண்டும் என்பதுடன் பரதனை விலக்கி ஏன் அனுப்ப வேண்டும் என்பது. மூன்றாவது பேரரசி என்று சிங்காதனத்தில் வீற்றிருக்கும் நீ இன்று வரை செல்வச் சிறப்போடு விளங்குகின்றாய். ஆனால் சீதை அந்த இடத்தில் அமர்ந்த பின்பு செல்வம் உன் கைவிட்டுப் போகும், யாருக்கும் நீ பயன்படமுடியாது, குறிப்பாக நீ பிறந்த வீட்டிற்குப் பயனின்றிப் போவாய், உன் தகப்பன் பகைவர்களால் அழிக்கப்படுவான், இராமன் உதவிக்குச் செல்லமாட்டான் என்பது.

அரசச் செல்வம் தன் கைவிட்டுப் போகின்றது என்றவுடன் ஆடிப்போகின்றாள் கைகேயி. பட்டத்தரசி என்ற பட்டம் பறிக்கப்படும் என்ற காரணம் அவள் உள்ளத்தில் பதைப்பை ஏற்படுத்துகின்றது. பரதனை விலக்கி வைத்துப் (ஊருக்கு அனுப்பிவைத்து) பட்டம் சூட்ட ஏற்பாடு நடப்பது ஏன் என்றவுடன் அவள் உள்ளம் எரிமலையாகின்றது.

இந்த மூன்று முக்கியக் காரணங்களால் மூத்தவனுக்கே பட்டம் உரியதாகட்டும் என எண்ணியிருந்த கைகேயியின் தூய சிந்தை திரிகிறது.

இவை ஒருபுறம் இருக்க நமக்கு வேண்டியது கைகேயி பட்டத்தரசி என்பதுதான். இதனை உறுதிசெய்யும் பாடல் இதுதான்.

"அரசில் பிறந்துபின் அரசில்வளர்ந்து
அரசில் புகுந்து பேரரசி ஆனநீ
கரைசெயற் கருந்துயர்க் கடலில் வீழ்கின்றாய்
உரைசெயக் கேட்கிலை உணர்தியோ என்றாள்"

இந்தப் பாடலில் காணப்படும் "பேரரசி" என்ற சொல் கைகேயிதான் பட்டத்தரசி என்பதைத் தெளிவாகச் சுட்டிக்காட்டுகின்றது. அரசனை மணக்கும் எந்தப் பெண்ணும் அரசியாவாள். எத்தனை மனைவியர் இருந்தாலும் அத்தனைப் பேரும் அரசியரே. ஆனால் அவர்களுள் ஒருத்தி மட்டுமே பட்டத்தரசியாக முடியும். அவளையே பேரரசி என்பர். அவளே கோப்பெருந்தேவியாவாள். அவளே அரசனோடு அரியணையில் அமரும் உரிமை படைத்தவளாவாள்.

கேகேயனுக்குச் சத்தியம் செய்துதந்ததால் கைகேயி பட்டத்தரசியானாள் என்று எங்கேயும் கம்பன் சொல்லவில்லை. ஆனால் இவளே பட்டத்தரசியாவாள் என நாம் உணரும் வண்ணம் சில இடங்களில் செய்தி சொல்லிச் செல்கின்றான். இராமனுடைய திருமணத்தின் பொருட்டு புறப்பட்டுச் செல்லும், தசரதன் அரசிமார்களில் கைகேயியின் சிவிகையே முதலில் பயணப்படுகிறது என்று சொல்வது கொண்டும், சீதையைக் கரம் பற்றியவுடன் தாயர்களை வணங்கி வாழ்த்துப் பெறவந்த இராமன் முதலில் கைகேயியை வணங்கிய பின்பே பெற்ற தாயையும் சுமத்திரையையும் வணங்கினான் என்று சொல்வது கொண்டும் மூவருள் கைகேயியே முதனிலை வகிக்கின்றாள் என்பதை உணரமுடிகின்றது.

அரச வம்சத்தில் பிறந்து, அரச வம்சத்தில் வளர்ந்து, அரச வம்சத்தில் வாழ்க்கைப்பட்டவள் கைகேயி எனக் கூனியின் கூற்றில் வைத்துக் கூறுமுகத்தான் மற்றை இருவரும் அர.சவம்சத்தில் பிறக்காதவர்கள் என்பதை அருத்தாபத்தியால் (ஒன்றைக் கொண்டு மற்றொன்றை அறிந்து கொள்ளுதல்) நாம் அறியும் வண்ணம் செய்து விடுகின்றான்.

இந்தக் கருத்துக்களின் அடிப்படையில் பார்த்தால் கைகேயிதான் பட்டத்தரசி என்பதையும், பட்டத்தரசியாகிய அவளுக்குப் பிறந்ததால் பரதனே நாடாள உரியவன் என்பதையும் நாம் உணரும் வண்ணம் கம்பன் நமக்குச் சொல்லிவிடுகின்றான்.

(தொடரும்)

## 100 ஆவது சிந்தனை நந்தவனம்

*குன்றக்குடித் திருமடத்தில் ஆங்கில மாதம் மூன்றாம் சனிக்கிழமை தோறும் நடைபெற்று வரும் "சிந்தனை நந்தவனம்" நிகழ்ச்சியின் நூறாவது நிகழ்ச்சி 15.4.2006 மாலை சிறப்பாக நடைபெற்றது. மாலை 5.00 மணியளவில் தேநீர் விருந்து அவையினருக்கு வழங்கப்பட்டது. சரியாக மாலை 6.00 மணிக்கு நிகழ்ச்சி தொடங்கியது.*

*நிகழ்ச்சிக்கு வழக்கம்போல் தவத்திரு குன்றக்குடி பொன்னம்பல அடிகளார் அவர்கள் தலைமை வகித்துச் சிறப்பித்தார். பாவலர்மணி ஆ. பழநி அறிமுக உரையாற்றினார். மனோன்மணியம் சுந்தரனார் பல்கலைக்கழக முன்னாள் துணைவேந்தர் முனைவர்.க.ப.அறவாணன் அவர்கள் "புறம் சொல்லும் புன்மை" என்னும் தலைப்பில் அருமையானதொரு சிந்தனையுரையாற்றினார். அவையினர் அறிஞர்களும் அன்பர்களுமாக நூற்றுக்கணக்கானோர் செவிமடுத்து மகிழ்ந்தனர். மரு. பரமகுரு நன்றி கூற மங்கல வாழ்த்துடன் நிகழ்ச்சி சிறப்பாக நிறைவேறியது.*

- ஆசிரியர்

# அருளாலய ஆட்சி

(தமிழாகரர். தெ. முருகசாமி, புதுச்சேரி - 9)

கருணையிலாக் கொடுங்கோன்மை ஆட்சி தானும்
கடிதொழிந்தே ஒழிகவென வடலூர் வந்த
கருணைவள்ளல் இராமலிங்கர் அன்று சொன்ன
கருத்ததனைக் காசினியில் பொருத்திப் பார்த்தால்
பெரும்பாலும் மக்களாட்சி முறைக்கு மாறாய்
பெரியதொரு சர்வாதி கார ஆட்சி
இருந்ததையே கண்டாலும் காலப் போக்கில்
இருந்தஇடம் தெரியாமல் போன தன்றோ?

உலகினையே நடுநடுங்கச் செய்த அந்த
உயர்ஜெர்மன் இட்லரைத்தான் நினைக்கும் போதே
கலங்காத நெஞ்சந்தான் உலகில் உண்டா?
கருவிலுள குழந்தையுமே கலங்கிப் போகும்!
குலங்கெடுத்தே உருசியாவை ஆண்ட அந்தக்
கொடுங்கோலன் ஜார்மன்னன் ஆட்சி தானும்
நலம்பயக்கா காரணத்தால் நாட்டோ ராலே
நறுக்காகத் தூக்கியெறியப் பட்டா ரன்றே!

இவ்வாறே இத்தாலிய நாட்டை யாண்ட
இரும்புமனச் சர்வாதி காரி என்னும்
ஒவ்வாத பாசிசத்தின் ஒட்டு மொத்த
உருவமெனும் முசோலினியாம் மூர்க்கர் தானும்
எவ்வாறு உலகையெலாம் தன்கீழ் ஆக்க
இட்லருடன் சேர்ந்துகொண்டு போரைச் செய்து
* தெவ்வெனவே ஆகிவிட்ட கார ணத்தால்
தெளிவாகச் சிறைபிடிக்கப் பட்டா ரன்றோ!

சர்வாதி காரந்தான் சந்தர்ப் பத்தின்
சழக்கான அரசியலைச் சேர்த்துக் கொள்ளும்!
கர்வமுடை மன்னரெலாம் கவிழ்ந்த தற்கும்
கணக்கான அதுவும்மே கார ணந்தான்!
நர்மதையின் நதியைப்போல் வற்றா ஊற்றாய்
"நலம்பயக்கும் மக்களது, ஆட்சி" என்றே
சர்வமத நாட்டிலுளோர் நினைத்த தாலே
சமதர்ம வாழ்க்கையுமே மலர்ந்த தன்றோ!

இதுதானே இவ்வுலகில் இருண்ட ஆட்சி
இருந்தஇடம் தெரியாமல் போன தற்குப்
பொதுவான வரலாறாய்ப் பொலிந்த தாலே
பொதுமைநூல் படைத்திட்ட குறளா சானும்
அதுவான ஆங்கார ஆட்சி நீங்கி
அருமந்த ஆட்சிதான் அமைய வேண்டி
மதுமயக்கக் கொடுங்கோன்மை பின்னே நிற்க
மதிப்புயர்ந்த செங்கோன்மை முன்சொன் னாரே!

இவையெல்லா வற்றிற்கும் மேலாய் அந்த
இணையில்லா நாடென்னும் அதிகா ரத்தின்
சுவையான ஒன்பானின் குறட்கப் பாலே
சுந்தரமாய்ச் சொல்லிட்ட குறளொன் றில்தான்
எவைஇந்த நாட்டிற்குத் தேவை யான
இனிமைதரும் ஆட்சியெனக் கூறும் போது
எவையிருந்த போதிலுமே பயன்தான் என்னே?
இதயமுடை அரசன்தான் அமையாப் போதே!

அருங்குறட்கு மேலுமொரு குறள்தான் உண்டோ
அஃதொன்றே அனைத்தையுமே நிரவல் செய்யும்,
பெருங்கருத்துக் குறளென்றால் அதுதான் நாட்டில்
பெரும்பான்மை வேண்டுமெனும் பெருமை யாலே
வருங்காலம் வரலாறு படைக்க, நந்தம்
வள்ளுவர்தான் வகுத்தவழி எந்த நாளும்
தரும்பெருமை என்பதினால் தரணி யெங்கும்
தழைத்ததுவே மக்களாட்சி மகிமை யன்றோ!

இவ்வாறாய் மக்களாட்சி மலர்ந்த தாலே
இடரின்றி மக்களுமே அச்சம் நீங்கிச்
செவ்வையுடன் வாழ்ந்திடவே செய்தார் என்ற
சரித்திரத்தைப் படித்தபடித் தூங்கி விட்ட
திவ்வியத்தால் தட்டியெனை யாரோ வந்து
திடுமெனவே எழுப்பியதால் எழுந்த நானும்
செவ்வாடைத் தோற்றத்தில் அருளா லயத்தின்
சிவனருளின் ஆட்சிக்கே ஆட்பட் டேனே!

---

தெவ்வெனவே - பகைவரென
அருமந்த - (தேவாமிர்தம் போன்ற) அருமையான
எவையிருந்த - ஆங்கமை வெய்தியக் கண்ணும் பயமின்றே
வேந்தமை வில்லாத நாடு (740)

---

## முக்கியமான பணி!

தண்ணீரைப் பாதுகாத்தல் என்பது சமுதாய மேம்பாட்டில் பொருளாதார - மேம்பாட்டில் முக்கியமான பணி.

இந்தப் பணியை, கடமையை நம்மில் பலர் இன்று உணரவில்லை. பல கண்மாய்கள், வரத்துக் கால்கள் தூர்ந்து கிடக்கின்றன. தூர்ந்து கிடப்பதோடன்றி அவற்றில் ஆக்கிரமிப்புகள் உள்ளன. கண்மாய்களை, ஏரிகளை ஏரிகளின் நீர்ப்பரப்பு, பகுதிகளை, தண்ணீர் வரத்துக் கால்களை ஆக்கிரமிப்பது குற்றம்; சமூகக் குற்றம்; பாபம்!

**-அருள்நெறித்தந்தை**

**எங்கே போகிறோம் நூலிலிருந்து**

உ
சிவமயம்




# தெய்வப்பழநியில் புகழ்பெற்றது
## பழநி
### பரிமள விலாஸ்

# S. சித்தநாதன்

## ஜவ்வாது வாசனை விபூதி
## &
## ஸ்பெஷல் பஞ்சாமிர்தம்
### வாங்கி உபயோகியுங்கள்

**Prop : S. சித்தநாதன் சன்ஸ்**
**அடிவாரம், பழநி — 624 601.**

போன் கடை : 242405 வீடு & ஸ்டோர் : 242406



# மக்கள் கல்வி நிலையம்

(மனிதவள மேம்பாட்டு அமைச்சகம், இந்திய அரசு)

குன்றக்குடி - 630 206

✆ : 04577 - 264567 Mobile : 94433 64200

குன்றக்குடி மக்கள் கல்வி நிலையம், கிராமம் மற்றும் நகர்ப்புற மக்களுக்கு கீழ்க்கண்ட தொழில்நுட்ப பயிற்சிகள் வழங்கிவருகிறது. பயிற்சி நிறைவு பெற்றபின் சான்றிதழ்களும், தொழில் துவங்க ஆலோசனைகளும் வழங்கப்படும். சுய உதவிக் குழுக்கள், கிராமப்புற மக்கள், இளைஞர்கள், பெண்கள் அனைவரும் இந்த வாய்ப்பை பயன்படுத்திக்கொள்ளுமாறு கேட்டுக்கொள்கிறோம்.

இயக்குநர்,

மக்கள் கல்வி நிலையம், குன்றக்குடி.

## பயிற்சிகள் (TRADES)

1. தையல் பயிற்சி 2.கணிப்பொறி பயிற்சி 3. எலக்ட்ரிக்கல் வயரிங் மற்றும் ரிப்பேரிங் 4. மின்அணுக்கருவிகள் பழுதுபார்த்தல் 5.வெல்டிங் பயிற்சி (பற்றவைத்தல்) 6.சீட் மெட்டல் உற்பத்தி 7.பைபர்கிளாஸ் பொருள்கள் உற்பத்தி 8.கட்டிட தொழில்நுட்பம், பொருள்கள் உற்பத்தி 9.இரண்டு நான்கு சக்கர வாகன பராமரிப்பு மற்றும் ரிப்பேரிங் 10.கயிறு மற்றும் பாய் தயாரித்தல் 11. குளிர்சாதனப் பெட்டிகள் ரிப்பேரிங் 12.வார்ப்பு உலோக உற்பத்தி 13.ஹாலோ பிளாக் & மொசைக் கற்கள் தயாரித்தல் 14. சாக்பீஸ், மெழுகுவர்த்தி தயாரித்தல் 15. கம்ப்யூட்டர்சாம்பிராணி, பினாயில் தயாரித்தல் 16. மருத்துவ உதவியாளர் 17.மருத்துவ உபகரணங்கள் பழுதுபார்த்தல் மற்றும் கயாளுதல் 18. திரை அச்சு வேலைகள் 19. வீட்டு உபகரணப் பொருட்கள் பழுதுபார்த்தல் 20.யோகா ஆசிரியர் பயிற்சி 21. ஓவியம் மற்றும் வரைபடம் வரைதல் 22. கைவினைப்பொருட்கள் தயாரித்தல் 23. உணவுப் பொருட்கள் தயாரித்தல் 24. கேஸ் வெல்டிங் 25. தொழில்முனைவோர் மேம்பாட்டுப்பயிற்சி 26. இயற்கை உயிர் உரம் (மண்புழு) தயாரித்தல் 27. வேளாண் சார்ந்த பயிற்சிகள் 28.தோட்டக்கலை சார்ந்த பயிற்சிகள் 29. கால்நடை சார்ந்த பயிற்சிகள் 30. மின்சாதனப்பொருட்கள் பராமரிப்பு

| | | |
|---|---|---|
| தகுதி | : | தன்முனைப்பு, தன் ஆர்வம் மட்டும். |
| பயிற்சி நேரம் | : | பயிற்சி நாள்தோறும் இரண்டு மணி நேரம் மட்டும். ஒன்றுக்கும் மேற்பட்ட பயிற்சிகளில் சேரலாம். |
| குறிப்பு | : | ஒவ்வொரு பயிற்சிக்கும் பயிற்சி நிறைவு பெற்றபின் தேர்வின் அடிப்படையில் சான்றிதழ்கள் வழங்கப்படும். |

## தவத்திரு குன்றக்குடி அடிகளாரின்

# *புதிய நூல்*

உலகம் முழுக்கத் திருக்குறள் பரப்பப் பேரவை கண்டவர்; தம் வாழ்நாள் முழுக்க வள்ளுவ நெறியினை வழங்கி நின்றவர்; வாழ்ந்து நிலைத்தவர் ஆகிய அடிகள் பெருமான் எழுதிய திருக்குறள் உரை முதன் முதலாக, நூல் வடிவமாக!







**தவத்திரு குன்றக்குடி அடிகளார்**
**திருக்குறள் உரை**
(விலை. ரூ. 160/- பக்கங்கள் : 360)

பதிப்பகங்கள், கல்லூரி, பள்ளி, நிறுவனங்கள் மற்றும் இலக்கிய அமைப்புகள் இவற்றோடு மாணவ, மாணவியர்க்கும் "மக்கள் சிந்தனை" சந்தாதாரர்க்கும் விலைச் சலுகை உண்டு.

அடிகளாரின் முத்துவிழா வெளியீடு

**அருள்நெறிப் பதிப்பகம்**
குன்றக்குடி - 630 206
சிவகங்கை மாவட்டம்.

பதிவு எண் : TN/SP/KKD-01/2006-2008
மக்கள் சிந்தனை மே / 2006. வெளியீட்டு நாள் 20-05-2006






பெறுநர்

திரு ஆதீனகர்த்தர் அவர்கள் அவர்கள்
கோவிலூர் ஆதீனம்
கோவிலூர்
காரைக்குடி (வழி)

அச்சிட்டோர் : சண்முகநாதன் அச்சகம், குன்றக்குடி. ✆ : 264166